இதைக் கேட்ட ஸீதை, இரண்டு மாதத்திற்குப் பின் இறப்பதைவிட அப்பொழுதே இறப்பது மேல் என நினைத்து, அம்மரத்தின் கிளையில் தன் தலைப் பின்னலைப் பொருத்திக் கழுத்தில் சுருக்கிட்டுக்கொன்று கொள்ள விரும்பி மரக்கிளையைப் பிடித்துக்கொண்டு நின்றாள். அச்சமயம் மரத்தின் மேலிருந்த அனுமார், அவளுக்கு ஆறுதல் கூறி உயிரைக்காக்க எண்ணியவராய் மெதுவான குரலில் ராமரது வரலாற்றைக் கூறவும், ஸீதை தலை நிமிர்த்தி மரக்கிளைகளினிடையில் இருந்த ஹனுமாரைக்கண்டு, தான் காண்பது உண்மையோ அல்லது கனவோ என ஐயமுற்றுத் திகைத்து நின்று, பின் தெய்வங்களை எல்லாம் நன்மையே பயக்கும்படி வேண்டினாள்.

## ஸுந்தர காண்டம்
## ஸர்க்கம் 33

### கதாஸங்கிரஹம்:

அப்பொழுது ஹனுமார் அம்மரத்தினின்றும் கீழே இறங்கி ஸீதையை வணங்கியபின், அவள் ஸீதை என்று தெரிந்தும் அவள் வாயிலாக அதைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற விருப்பத்துடன் பேசலுற்றார்.

“தாயே, தாங்கள் யார்? தங்கள் கண்களினின்றும் சோகக் கண்ணீர் பெருகுகின்றதே! ஏன்? தேவர் முதலியவர்களில் எவருடைய குலத்திலுதித்தவர் தாங்கள்? சந்திரனைவிட்டு இவ்வுலகிற்கு வந்துள்ள ரோஹிணியோ? கோபத்தினாலோ, அறியாமையினாலோ வஸிஷ்டருக்கு மனம் வருத்தம் உண்டாக்கிவிட்டு பூவுலகு வந்துள்ள அருந்ததி அல்லவே தாங்கள்? யாரைப்பற்றித் தாங்கள் வருந்துகிறீர்கள்? கண்ணீர் விடுவதனாலும், தரையின்

ஸ்பர்சமிருப்பதாலும், பெருமூச்செறிவதாலும், மற்றும் க்ஷத்ரிய லக்ஷணங்களாலும் தங்களை மனுஷ்யஸ்திரீயாக எண்ணுகின்றேன். தங்களிடம் காணப்படுகின்ற அடையாளங்களிலிருந்து தாங்கள் க்ஷத்ரிய குமாரி என்றும் க்ஷத்ரியரின் மனைவி என்றும் ஊஹிக்கின்றேன். ராவணனால் ஜனஸ்தானத்திலிருந்து பலாத்காரமாகக் கொண்டுவரப்பட்ட ராமபத்னியோ? அவ்வாறாயின் உடனே கூறுங்கள், இனி உங்களுக்கு நன்மையே உண்டாகும். தங்களது தவ வேஷம் முதலியவற்றால் தாங்கள் ராமர் மனைவி என்றே கருதுகின்றேன்" என்றான்.

ராமர் பெயரைக் கூறியதால் மகிழ்ச்சியுற்ற ஸீதை ஹநுமாரை நோக்கிப் பதில் சொன்னாள். "அரசர்களில் சிறந்த தசரதரின் நாட்டுப் பெண் நான். ஜனகரின் புத்ரி; ராமரது மனைவி. என் பெயர் ஸீதை என்பது. ராமரது கிருஹத்தில் பன்னிரண்டு வருஷகாலம் மனிதர் அனுபவிக்கக் கூடிய இன்பங்களை எல்லாம் அனுபவித்தேன். பதின் மூன்றாவது வருஷம் தசரதர் ராமருக்குப் பட்டாபிஷேகம் செய்ய முயன்ற பொழுது, கைகேயி, தசரதரிடம், 'ராமருக்கு பட்டாபிஷேகம் செய்தால் அதுவே என் வாழ்நாளுக்கு முடிவு செய்வதாகும். நான் இனி ஆஹாரம் கொள்ளமாட்டேன். நீர் எனக்குக் கொடுத்த வாக்கு உண்மையாக வேண்டுமாயின் ராமன் காட்டிற்குச் செல்ல வேண்டும்" என்றாள். அவள் வார்த்தையைக் கேட்டு மூர்ச்சித்தார் அரசர். ஆயினும் உண்மையைக் கடைப்பிடிப்பவரான தசரதர்தான் கொடுத்த ராஜ்யத்தை தனக்குத் தரும்படி அழுது கொண்டே, ராமரிடம் யோசித்தார். ராமரோ வெனில் ராஜ்யாபிஷேகத்தைக் காட்டிலும் தந்தையின் வார்த்தையை நிறைவேற்றுவதையே பெரிதாகக் கருதுபவர். கொடுப்பாரே

யன்றி தானம் வாங்காதவர். உண்மையே பேசுபவர். எனவே, மனப்பூர்வமாக ராஜ்யத்தைத் தந்தையினிடம் விட்டுக் காட்டிற்குக் கிளம்பினார். நானும் லக்ஷ்மணனும் அவருடன் முன் கண்டிராத தண்டகாரண்யம் வந்தோம். அங்குவசிக்கும்பொழுது துராத்மாவான ராவணனால் நான் அபஹரிக்கப்பட்டேன். ராவணன் இரண்டுமாத காலம் எனக்கு உயிர் அளித்திருக்கிறான். அதற்குப் பின் நான் இறப்பேன்" என்றாள்.

1—2. **विद्रुम-प्रतिम आननः** - பவழம்போன்ற முகமுடையவரும், **महातेजाः** - மிகுந்த தேஜஸ்வியுமான, **मारुतात्मजः सः-हनुमान्** - வாயுதேவன் குமாரரான அந்த ஹனுமார், **तस्मात्** - அந்த, **द्रुमात्** - மரத்தினின்றும், **अवतीर्य** - கீழே, இறங்கி, **विनीत वेषः** - வணக்கமான தோற்ற முடையவராகவும், **कृपणः** மன இரக்க முடையவராகவும் இருந்து கொண்டு, **उपसृत्य** - அருகில் சென்று, **प्रणिपत्य** - வணங்கியபின், **शिरसि** - தமது தலைமேல், **अञ्जलिं** - அஞ்சலியை, **आधाय** - வைத்துக்கொண்டு, **तां सीतां** - அந்த ஸீதையிடம் **मधुरया** - இனிய, **गिरा** - சொற்களால், **अब्रवीत्** - பேசினார்.

(க - து) ஹனுமார் மரத்தினின்றும் கீழே இறங்கி ஸீதைக்கு அருகில் சென்று வணங்கியபின் பேசலுற்றார்.

**विद्रुमः प्रतिमा यस्य तत्-आननं यस्य सः विद्रुमप्रतिमाननः ।**

**महत् तेजः यस्य सः महातेजाः ।**

**प्रणिपत्य** - Indec. Past part. of **पत्** with **प्र** and **नि ।**

**उपसृत्य** Indec. Past part. of **सृ** with **उप ।**

**अब्रवीत् अब्रूतां अब्रुवन्** Imperf. 3rd sing. of **ब्रू** to speak II. P. **ब्रवीति** Pres.

**विनीतः वेषः यस्य सः विनीतवेषः ।**

---

**पयःपानं भुजङ्गानां केवलं विषवर्धनम् ।**

3. **पद्मपलाशाक्षि** - *தாமரை இதழ்போன்ற கண்களை யுடையவரே,* **क्लिष्टकौशेयवासिनि** - *கசங்கிய பட்டு வஸ்திரம் அணிந்திருப்பவரே,* **अनिन्दिते** - *மாசற்றவரே,* **द्रुमस्य** - *இந்த மரத்தின்,* **शाखां** - *கிளையை,* **आलंब्य** - *பற்றிக் கொண்டு,* **तिष्ठसि** - *நிற்கின்றீர்,* **त्वं** - *நீர்,* **का नु** - *யார்?*

**पद्मस्य पलाशे इव अक्षिणी यस्याः सा पद्म........क्षी- तस्याः संबुद्धिः।**

**क्लिष्टं कौशेयं वस्ते इति क्लिष्टकौशेयवासिनी, तस्याः संबुद्धिः।**

**तिष्ठसि तिष्ठथः तिष्ठथ** Pres. 2nd sing. of **स्था (तिष्ठ ,)** I.

4. **पुण्डरीक पलाशाभ्यां** - *தாமரை இதழ்களினின்றும்,* **विप्रकीर्णं** - *உதிர்ந்த,* **उदकं इव** - *ஜலம்போல்,* **तव** - *உமது* **नेत्राभ्यां** - *கண்களிலிருந்து,* **शोकजं** - *துக்கத்தினால் உண்டான,* **वारि** - *நீர்,* **किमर्थं स्रवति** - *ஏன் பெருகுகின்றது?*

**शोकात् जायते इति शोकजम्।**

**वारि** - Note the declension.

**स्रवति स्रवतः स्रवन्ति** Pres. 3rd sing. of **स्रु** I. P.

5. **शोभने** - *மங்களமுடையவரே,* **सुराणां** - *தேவர்கள்,* **असुराणां** - *அஸுரர்கள்,* **नागगन्धर्वरक्षसां** - *நாகர்கள், கந்தர்வர்கள், ராக்ஷஸர்கள்,* **यक्षाणां** - *யக்ஷர்கள்,* **किन्नराणां वा** - *கின்னரர்கள் இவர்களுள்,* **त्वम्** - *நீர்,* **का भवसि** - *யாராக இருக்கின்றீர்?*

(க - து) தாங்கள் எந்த குலத்தைச் சேர்ந்தவர்?

6. **वरानने** - *அழகிய முகமுடையவரே,* **रुद्राणां** - *ருத்ரர்கள்,* **मरुतां** - *மருத்துக்கள்,* **वसूनां वा** - *வஸுக்கள் (இவர்களில்)* **त्वं का भवसि** - *தாங்கள் யாராக இருக்கின்றீர்கள்.*

**वरारोहे** - அழகு பொருந்தியவரே, **मे** - எனக்கு, **देवता** - (தாங்கள்) தேவஜாதியினராக, **प्रतिभासि** - தோன்றுகின்றீர்கள்.

(க - து) தாங்கள் தேவஸ்திரீயோ என ஸந்தேகப்படுகிறேன்.

वरं आननं यस्याः सा वरानना, तस्याः संबुद्धिः । ·

प्रति-भासि - Pres. 2nd. sing. of भा with प्रति ।

7. **ज्योतिषां** - நக்ஷத்ரங்களுக்குள், **श्रेष्ठा** - சிறந்தவளும், **श्रेष्ठ सर्व गुणान्विता** - சிறந்த நற்குணங்கள் எல்லாமுடையவளும், **चन्द्रमसा हीना** - சந்திரனை விட்டுப் பிரிந்தவளும், **विबुधालयात्** - ஸ்வர்க்கத்தினின்றும், **पतिता** - கீழே வந்தவளுமான, **रोहिणी किन्तु** - ரோஹிணியோ (தாங்கள்)?

चन्द्रमाः चन्द्रमसौ चन्द्रमसः Dec. like वेधस् ।

विबुधानां आलयः, तस्मात् ।

ज्योतिषां - Gen. Plu. of ज्योतिस्. Dec. ज्योतिः ज्योतिषी ज्योतींषि etc.

8. **कल्याणि** - மங்களமுடையவரே, **त्वं का** - தாங்கள் யார்? **अनिन्दित लोचने** - அழகு பொருந்திய கண்களையுடையவரே, **त्वं का भवसि** - தாங்கள் யாராக இருக்கின்றீர்கள்?

अनिन्दिते लोचने यस्याः सा अनिन्दितलोचना तस्याः संबुद्धिः ।

9. **असितेक्षणे** - கருத்த கண்களையுடையவரே, **कल्याणि** - நன்மையுடையவரே, **कोपाद्वा** - கோபத்தினாலோ, **यदि वा मोहात्** - அறியாமையினாலோ, **भर्तारं** - கணவரான, **वसिष्ठं** - வஸிஷ்டருக்கு, **कोपयित्वा** - கோபமுண்டாக்கிய

इन्द्रियार्थेषु न प्रसज्येत ।

பின், (**विबुधालयात्** - ஸ்வர்க்கத்தினின்றும், **पतिता** - வந்துள்ள), **अरुन्धती न असि त्वम्** - அருந்ததி அல்லவே தாங்கள் ?

**असिते ईक्षणे यस्याः सा असितेक्षणा, तस्याः संबुद्धिः ।**

**कोपयित्वा** - Caus. Indec. past part. of **कुप्** ।

10. **सुमध्यमे** - அழகிய தோற்றமுடையவரே, **अस्मात्-लोकात्** - இவ்வுலகினின்றும், **अमुं लोकं** - அவ்வுலகு, **गतं** - சென்ற, **यं** - எவரைக்குறித்து, **त्वं** - தாங்கள், **अनुशोचसि** - வருந்துகின்றீர்களோ, **सः** அவர், **ते पुत्रः नु** - உங்கள் புத்ரரா, **पिता नु** - தந்தையா ? **भ्राता नु** - உடன் பிறந்தவரா? **भर्ता वा** - கணவரா ? **सः कः** - யார் அவர் ?

(க - து) யாரைப்பற்றித் தாங்கள் வருந்திக்கொண்டிருக்கிறீர்கள்?

**अनु-शोचसि शोचथः शोचथ**. Pres. 2nd. sing. of **शुच्** with **अनु** I. P.

11. **रोदनात्** - தாங்கள் கண்ணீர் விடுதலாலும்; **अतिनिश्श्वासात्** - பெருமூச்செறிவதாலும், **भूमि संस्पर्शनात् अपि** - தரையில் இருப்பதாலும், **राज्ञः** - அரசர்க்குரிய, **संज्ञावधारणात्** - அடையாளங்களைக் காண்பதாலும், **त्वां** - உம்மை, **देवीं** - தேவஸ்திரீயாக, **न मन्ये** - நான் எண்ணவில்லை.

(க - து) தேவஸ்திரீகளிடம் காணமுடியாத சில தங்களிடம் காணப்படுவதாலும் அரசியாக இருத்தற்குரிய லக்ஷணங்கள் தங்களிடம் காணப்படுவதாலும் தங்களை நான் தேவஸ்திரீயாகக் கருதவில்லை.

**भूमेः संस्पर्शनं, तस्मात् ।**

**संज्ञायाः अवधारणं, तस्मात् ।**

मन्ये-मन्यावहे मन्यामहे Pres. 1st sing. of मन् to think IV. A.

12. ते - உமக்கு, यानि - எந்த, व्यञ्जनानि - அடையாளங்களையும் लक्षणानि - ஸாமுத்ரிகாலக்ஷணங்களையும், लक्षये - காண்கின்றேனோ, तैः - அவைகளாலே, त्वं - தாங்கள், राजकन्या - ராஜவம்சத்தில் பிறந்தவர் என்றும் भूमिपालस्य - ஒரு அரசரின், महिषी च - மனைவி என்றும், मे - என்னால் मता असि - அறியப்படுகின்றீர்.

(க - து) அடையாளங்களிலிருந்தும் மற்றுமுள்ள லக்ஷணங்களிலிருந்தும், தங்களை க்ஷத்ரிய வம்சத்திலுதித்து க்ஷத்திரியரை மணந்தவராகக் கருதுகின்றேன்.

राज्ञः कन्या राजकन्या।

लक्षये Pres. 1st sing. of लक्ष् X to see.

13. रावणेन - ராவணனால், जनस्थानात् - ஜனஸ்தானத்திலிருந்து, बलात् , பலாத்காரமாக, अपहृता - அபகரிக்கப்பட்ட, सीता - ஸீதையாக, त्वं असि यदि - நீர் இருப்பீராயின், पृच्छतः - கேட்கின்ற, मम - எனக்கு, तत् - அதை आचक्ष्व - கூறுவீராக, ते - உமக்கு, भद्रं - நன்மையே, भवेत् - உண்டாகும்.

आचक्ष्व-आ-चक्षाथां आचड्ढ्वम्। Imper 2nd sing of चक्ष् with आ. II.

14. यथा - எக்காரணத்தினால், तव - உமது, दैन्यं - இரங்கத்தக்க நிலையும், रूपं च - வடிவமும், अतिमानुषम् - மனிதர்களிடையில் காணப்படாததோ वेषः - தோற்றமும், तपसा च अन्वितः தவத்துடன் கூடியதாக இருக்கின்றதோ, ततः - அதனால் , त्वं - தாங்கள், ध्रुवं - திண்ணமாக, राममहिषी - ராமரின் மனைவிதான்.

सुखार्थी संयतो वसेत्।

यथा-यत: । मानुषं अतिक्रान्तं अतिमानुषम् । ध्रुवम् Indec ; रामस्य महिषी ।

15. **तस्य** -அவருடைய, **वचनं** - வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டபின், **रामकीर्तन हर्षिता** - ராமரைப்பற்றிக் கூறிய தால் சந்தோஷமடைந்த, **सा वैदेही** - அந்த ஸீதை, **द्रुमाश्रितम्** - மரத்தினடியில் இருந்த, **हनुमन्तं** - ஹனுமாரிடம், **वाक्यं उवाच** - இவ்வார்த்தையைச் சொன்னாள்.

रामस्य कीर्तनं ; तेन हर्षिता ।

विदेहानां राजा वैदेह:, तस्यापत्यं वैदेही । द्रुमं आश्रित: द्रुमाश्रित: । तम् ।

उवाच ऊचतु: ऊचु: Perf 3rd sing of वच् ।

16. **पृथिव्यां** - இப்பூமியில், **राजसिंहानां** - சிறந்த அரசர்களுக்கு, **मुख्यस्य** - தலைவரும், **विदितात्मन:** - ஆத்மஸ்வரூபமறிந்தவரும், **शत्रुसैन्य प्रतापिन:** - சத்ருக்களின் ஸேனையைத் தபிக்கச் செய்பவருமான, **दशरथस्य** - தசரதருடைய, **स्नुषा** - நாட்டுப் பெண், **अहम्** - நான்.

राजान: सिंहा: इव राजसिंहा:, तेषाम् ।

विदित: आत्मा यस्य तस्य विदितात्मन: ।

शत्रुसैन्यं प्रतपतीति शत्रुसैन्यप्रतापी, तस्य ।

17. **वैदेहस्य** - விதேஹ நாட்டரசரும் - **महात्मन:** - மஹாத்மாவுமான, **जनकस्य** - ஜனகரின், **सुता** - பெண்ணும், **नाम्ना** - பெயரினால், **सीता नाम** - ஸீதை என அறியப் பட்டவளுமான, **अहम्** - நான், **धीमत:** - புத்திசாலியான, **रामस्य** - ராமருடைய, **भार्या** - மனைவி.

महान् आत्मा यस्य स: महात्मा, तस्य ।

ONE WHO CONTROLS HIS SENSES WILL BE HAPPY.

धी: अस्य अस्तीति धीमान् तस्य ।

18. **तत्र** - அங்கு, **राघवस्य** - ராமருடைய, **निवेशने** - வீட்டில், **सर्वकामसमृद्धिनी** - எல்லாப்பொருள்களின் நிறைவையுடையவளாக, **द्वादश समा**: பன்னிரண்டு வருஷங்கள், **मानुषान्** - மனிதர்கள் விரும்பும், **भोगान्** - சுகங்களை, **भुञ्जाना** - அனுபவித்துக்கொண்டு, **अभवम्** - இருந்தேன்.

सर्वकामानां समृद्धं, तत् अस्या: अस्तीति समृद्धिनी ।

**समा**:-Fem. declined in plural only; Adverb of time is used in the second case only. **भुञ्जाना**-Pres. part. of भुज् ।

19. **तत्र** - அப்பொழுது, **त्रयोदशे वर्षे** - பதின்மூன்றாவது வருஷத்தில், **राजा** - மஹாராஜர்தசரதர், **सोपाध्याय**: - உபாத்யாயருடன் கூடியவராக, **इक्ष्वाकुनन्दनं** - இக்ஷ்வாகு வம்சத்தை மகிழ்விக்கும் ராமரை, **राज्येन** - ராஜ்யத்தில், **अभिषेचयितुं** - அபிஷேகம் செய்ய, **प्रचक्रमे** - தொடங்கினார்.

त्रयोदशानां पूरणं त्रयोदशम्, तस्मिन् ।

उपाध्यायेन सह वर्तते इति सोपाध्याय: ।

इक्ष्वाकुं-इक्ष्वाकुकुलं, नन्दयतीति इक्ष्वाकुनन्दन:, तम् । राज्येन-राज्ये ।

प्र—चक्रमे चक्रमाते चक्रमिरे—Perf. 3rd sing. of क्रम् । क्रम् with प्र is atmanepadi.

20, **राघवस्य** - ராமருடைய, **तस्मिन्** - அந்த, **अभिषेचने** - அபிஷேகத்திற்கான த்ரவ்யங்கள், **संभ्रियमाणे** - சேகரிக்கப்படும்பொழுது, **कैकेयी नाम देवी** - கைகேயி என்ற

ராஜமஹிஷி, भर्तारं - தன்கணவரான தசரதரிடம், वचनं - இவ்வார்த்தையை, अब्रवीत् - கூறினர்.

संभ्रियमाणे । Pass. pres. part. of भृ ।

अब्रवीत् अब्रूतां अब्रुवन् Imperf of ब्रू II. P.

21. प्रत्यहं -தினந்தோறும், मम - எனது, भोजनं உணவை, न पिबेयम् - நான் அருந்தமாட்டேன்; न खादेयम् - சாப்பிடமாட்டேன் ; रामः ராமன், अभिषिच्यते यदि - அபிஷேகம் செய்யப்படுவானயின், एषः - இதுவே, मे - எனது, जीवितस्य - வாழ்க்கையின், अन्तः முடிவாகும்.

भुज्यते इति भोजनम् - உண்ணப்படும் பொருள்.

खादेयं - खादेव खादेम. Pot. 1st sing. of खाद् to eat. Likewise पिबेयम्. from पिब् ।

अभि-सिच्यते. Pres. pass. 3rd sing. of सिच्, VI. P.

22. नृपति सत्तम - அரசர்களில் சிறந்தவரே, पूर्वं - முன்பு, त्वया - உம்மால், प्रीत्या - ப்ரீதியுடன், यत् वाक्यं - எந்த வார்த்தை, उक्तं - கூறப்பட்டதோ, तत् - அது, वितथं - பொய்யானதாக, न कार्यं चेत् - செய்யப்படுதல் கூடாதென்பது உமதுகருத்தாயின், राघवः - ராமன், वनं - காட்டிற்கு, गच्छतु - போகவேண்டும்.

சம்பரன் என்ற அஸுரனுடன் சண்டை செய்த பொழுது தசரதர் அவ்வஸுரனது பாணங்களால் அடிபட்டு மூர்ச்சையானர். அப்பொழுது ஸாரத்யம் செய்த கைகேயி, தசரதரை ரணகளத்தினின்றும் கொண்டு சென்று உதவி புரிந்தாள். அதனல் சந்தோஷம் கொண்ட தசரதர் அவள் விரும்பியபடி இரண்டு விருப்

பங்களை நிறைவேற்றுவதாக அன்புடன் வாக்களித்தார். அதை நினைவூட்டிக் கைகேயி, ராமரைக் காட்டிற்கு அனுப்பும்படியும் பரதனுக்கு முடி சூட்டும்படியும் தசரதரை வேண்டினள்.

**अतिशयेन सन् सत्तमः । नृपतिषु सत्तमः; तस्य संबुद्धिः । विगतः तथाभावः यस्य तत् वितथम् ।**

**गच्छतु गच्छतां गच्छन्तु** Imper. 3rd sing. of **गम्** (**गच्छ्**) to go I. P.

23. **सत्यवाक्** - உண்மையான வாக்கையுடைய, **सः राजा** - அவ்வரசர், **कैकेय्याः** - கைகேயியின், **अप्रियं** - பிரியமல்லாததும், **क्रूरं** - கொடியதுமான, **वचनं** - வார்த்தையை, **श्रुत्वा** - கேட்டு, **देव्याः** - கைகேயிக்குத் தந்த, **वरदानं** - வரத்தை, **अनुस्मरन्** - நினைத்து, **मुमोह** - மூர்ச்சையடைந்தார்.

**सत्या वाक् यस्य सः सत्यवाक् ।**

**मुमोह मुमुहतुः मुमुहुः** Perf. of **मुह्** VI P.

24. **ततः** - பிறகு, **स्थविरः** - வயது முதிர்ந்தவரும், **सत्ये** - ஸத்தியத்திலும் **धर्मे** - தர்மத்திலும், **व्यवस्थितः** நிலைபெற்றிருந்தவருமான **राजा** - அரசர், **यशस्विनं** - கீர்த்தி வாய்ந்த, **ज्येष्ठपुत्रं** - மூத்தகுமாரரிடம், **रुदन्** - அழுது கொண்டே, **राज्यं** - ராஜ்யத்தை, **अयाचत** - வேண்டினார்.

(க-து) முறைப்படி ராஜ்யம் மூத்தமகனை ராமருக்குச் சேர வேண்டியது. எனவே, அதைப் பரதனுக்குத் தர, தசரதர் ராமரிடம் அவரது அனுமதியை வேண்டினார்.

25. **श्रीमान्** - ஒளி பொருந்திய, **सः** - ராமர், **अभिषेकात्** - அபிஷேகம் செய்துகொள்வதைக் காட்டிலும்,

---

नित्यं शास्त्राणि अवेक्षेत ।

**परम्** - மிகவும், **प्रियं** - பிரியமானதாக, **पितु : वचनं** - தந்தையின் சொல்லை, **मनसा** - மனத்தினல், **पूर्वं** - முதலில், **आसाद्य** - அங்கீகரித்து, **वाचा** - (பிறகு) வார்த்தையினுலும், **प्रतिगृहीतवान्** - ஏற்றுக்கொண்டார்.

அபிஷேகம் செய்து கொள்வதைக் காட்டிலும் தந்தையின் சொல்லை நிறைவேற்றுவது மிக மகிழ்ச்சியைத் தரக்கூடியது. எனவே, அவர் கூறியதை மனப்பூர்வமாக ஏற்று வாக்கினுலும் அவ்வாறே செய்வதாக உறுதி அளித்தார்.

**श्री : अस्य अस्तीति श्रीमान् ।**

26. **सत्यपराक्रम :** - உண்மையான பராக்ரமமுடைய, **राम :** - ராமர், **दद्यात्** - (எப்பொழுதும்) கொடுப்பார்; **जीवितहेतो : अपि वा** - தாம் வாழ்வதற்காகவும் கூட, **न प्रतिगृह्णीयात्** - பிறரிடம் வாங்கமாட்டார், **अप्रियं** - பிரியம் இல்லாத, **किञ्चित्** எதையும் **न ब्रूयात्** - சொல்லமாட்டார்.

**सत्य : पराक्रम : यस्य स : सत्यपराक्रम : ।**

**दद्यात् दद्यातां दद्यु :** - Pot. of **दा ।**

**गृह्णीयात् - गृह्णीयातां गृह्णीयु :** Pot of **ग्रह्** IX. P.

**ब्रूयात् ब्रूयातां ब्रूयु :**. Pot of **ब्रू** II. P.

27. **महायशा :** - பெரும் புகழ்பெற்ற, **स :** - அவர், **महार्हाणि** - விலையுயர்ந்த, **उत्तरीयाणि** - உத்தரீயங்களை, **विहाय** - விட்டு, **राज्यं** - ராஜ்யத்தையும், **मनसा** - மனத்தினல், **विसृज्य** - தானம் செய்துவிட்டு, **जनन्यै** - தம் தாய் கௌஸல்யையிடம் **मां** - என்னை - **समादिशत्** - ஒப்படைத்தார்.

**महत् यश : यस्य स : महायशा : ।**

**महान् अर्हः येषां तानि महार्हाणि ।**

28. **सा अहं** - அத்தகைய நான், **वनचारिणी** - வனத்தில் வஸிக்க விருப்புடையவளாக, **तस्य अग्रतः** அவருக்கு முன்னால், **तूर्णं** - சீக்ரமே, **प्रस्थिता** - புறப்பட்டேன். **तेन हीनायाः** - அவர் இன்றி இருக்கின்ற, **मे** - எனக்கு, **स्वर्गेऽपि** - ஸ்வர்க்கத்திலும் கூட, **वासः** - வாஸமானது, **न रोचते हि** - பிடிக்கவில்லை.

**तूर्णम्** Indec. **अग्रतः** Indec.

'**मे वासः न रोचते**'-**रुच्** Governs a noun in the dative case. **मे** Dative of **अस्मद्** । **वासः** Mas.

29. **मित्रनन्दनः** - மித்ரர்களுக்கு ஆனந்தமளிப்பவரும், **महाभागः** - மிகுந்த பாக்யசாலியுமான, **सौमित्रिः** லக்ஷ்மணர், **पूर्वजस्य** - தமையனாரை, **अनुयात्रार्थे** - பின் தொடர்வதற்காக, **द्रुमचीरैः** - மரவுரிகளினால், **प्राग् एव** - (ராமருக்கு முன்னமேயே, **अलङ्कृतः**, அலங்கரிக்கப்பட்டவர் ஆனார்.

(க - து) லக்ஷ்மணன், ராமருக்கு முன்பே மரவுரிகளைக் கட்டிக் கொண்டு வனம் செல்லத் தயாராக இருந்தான்.

30. **ते** - அத்தகைய, **वयं** - நாங்கள், **दृढव्रताः** - உறுதியான எண்ணமுடையவர்களாக, **भर्तुः** - அரசர் தசரதரது, **आदेशं** - கட்டளையை, **बहुमान्य** - கௌரவித்து, **पुरा** - முன்பு, **अदृष्टं** - பார்க்கப்படாததும், **गंभीर दर्शनं** - கம்பீரமான தோற்றமுடையதுமான, **वनं** - வனத்தில், **प्रविष्टाः** - பிரவேசித்தோம்.

**दृढं व्रतं येषां ते दृढव्रताः ।**

**गंभीरं दर्शनं यस्य तत् ।**

---

**शक्तितो याचमानेभ्यो दातव्यम् ।**

स्म पादपूरणम्। 'तु हि च स्म ह वै पादपूरणे'—Amara.

31. **अमितौजसः** - *அளவற்ற பராக்ரமமுடையவரும்*, **दण्डकारण्ये** - *தண்டகாரண்யத்தில்*, **वसतः** - *வஸிப்பவரு மான*, **तस्य** - *அவருடைய*, **भार्या** - *மனைவியாகிய*, **अहम्** - *நான்*, **दुरात्मना** - *துராத்மாவும்*, **रक्षसा** - *ராக்ஷஸனுமான*, **रावणेन** - *ராவணனால்*, **अपहृता** - *அபகரிக்கப்பட்டேன்*.

**अमितं ओजः यस्य सः अमितौजाः** Dec. like **वेधस्**, **तस्य**।

**वसतः** Pres. part. of **वस्**।

**दुष्टः आत्मा यस्य सः दुरात्मा तेन**।

**रक्षसा** Dec. like **मनस्**।

32. **तेन** - *அந்த ராவணனால்*, **मे** - *எனக்கு*, **द्वौ मासौ** - *இரண்டு மாதங்கள் என்று*, **कालः** - *காலமானது*, **जीवितानुग्रहः** - *உயிர்வாழ்வதற்கு ஒரு அனுக்ரஹமாக*, **कृतः** - *தரப்பட்டுள்ளது*, **ततः** - *அதனால்*, **द्वाभ्यां मासाभ्यां ऊर्ध्वं** - *இரண்டு மாதங்களுக்குமேல்*, **जीवितं** - *உயிரை*, **त्यक्ष्यामि** - *விட்டு விடுவேன்*.

**त्यक्ष्यामि**-Future I. sing. of **त्यज्**, VI. P.

## ஸுந்தரகாண்டம் 33-ஆவது ஸர்க்கம் முற்றும்.

# 34-ஆவது ஸர்க்கம்.

**கதா ஸங்கிரஹம் :**

ஸீதை கூறியதைக்கேட்ட ஹனுமான், "தேவியே! ராமரது உத்தரவினுல் நான் இங்கு தூதனுக வந்துள்ளேன். பிரம்மாஸ்த்ரம் முதலியவற்றை அறிந்த ராமரும் லக்ஷ்மணரும் ஸௌக்யமாக இருக்கின்றனர். தங்களுடைய க்ஷேமத்தையும் விசாரிக்கின்றனர். லக்ஷ்மணன் தங்களுக்கு நமஸ்காரம் தெரிவிக்கின்ருர்" எனக்கூறி, ஆறுதல்கூற முற்பட்டார்.

ராம லக்ஷ்மணர்களின் க்ஷேமத்தைப்பற்றிக் கேள்வியுற்று ஸந்தோஷ மடைந்த ஸீதை, "பல வருஷங்களுக்குப் பின்னும் ஒரு மனிதன் உயிர்வாழ்வானுயின் நிச்சயமாக ஸுகம் பெறுவான்' என்று உலகத்தினர் கூறுகின்றனர். இப்பழமொழி உண்மையானதே. பத்து மாதங்களுக்குப்பின் இன்று ராமரைப்பற்றிக் கேள்வியுறும் பாக்யம் பெற்றேன்" என்று கூறினுள். ஹனுமார் அப்பொழுது அருகில் செல்லவும், அவரை வேற்றுருவில் வந்த ராவணனுக எண்ணி, "அந்தோ! வேற்றுருவில் வந்த ராவணனிடம் மனம்விட்டுப் பேசினேனே! என்ன மடமை இது" என்று சொல்லிப் பயந்து தரையில் உட்கார்ந்தாள். அச்சமுற்ற ஸீதையின் மன ஆறுதலுக்காக ஹனுமார் வணங்கி நிற்கவும், ஸீதை, "நீ மாயாவியான ராவணனுக இருந்து மேலும் துன்பம் கொடுப்பாயானுல் அது உனக்குத் தகாது. ஜனஸ்தானத்தில் வேறு வடிவில் வந்து என்னைக் கவர்ந்த ராவணன்தான் நீ. என்னை வருத்துவது நல்லதா" என்று சொல்லிப்பின் சிறிது மனம் தேறியவளாக, 'ஐயா, நீர் ராமதூதராயின் அவரது குணங்களைக் கூறுவீராக" என்ருள். "ஒரு வேளை நான் காண்கின்ற இது ஸ்வப்னமோ; ஆனுல் நான் தூங்குவதில்லையாகையால் இது

न मलिनवस्त्रो भवे :

ஸ்வப்னமாக இருக்காது. மேலும், என்முன் வானரர் இருப்பதை நான் நன்கு உணர்கின்றேனே! அல்லது இது மதிமயக்கமோ? வாத சேஷ்டையோ? பித்தம் முற்றி இவ்வாறு தோன்றுகின்றதோ? அல்லது கானல் நீர் போன்று உருவெளித் தோற்றமோ இது?" எனக் கருதி மனம் தவித்தாள். பிறகு ராவணனே என நினைத்து ஒன்றும் பேசாது இருந்தாள்.

அப்பொழுது ஹனுமார் அவள் மனத்திற்குச் சிறிது ஊக்கமளிக்க விரும்பியவராகக் கீழ்வருமாறு கூறினார்.

"தாயே! ராமர் சூரியன்போல் ஒளி பொருந்தியவர். சந்திரன்போல் உலகிற்குப் பிடித்தவர். விஷ்ணுபோல் பராக்ரமசாலி. பிருகஸ்பதிபோல் மதுரமான பேச்சுடையவர். மன்மதன்போல் வடிவழகர். மஹாரதர். உலகமே அவரைத்தான் ஆச்ரயித்துள்ளது. மான்மூலம் அவரை ஆச்ரமத்தினின்றும் அப்புறப்படுத்திவிட்டு உம்மை ராவணன் கவர்ந்து வந்தான். அதன் பலனைச் சீக்கிரமே அனுபவிப்பான். அனல்போன்ற பாணங்களால் சீக்கிரமே ராமர் அவனைக் கொல்வார். ராமர் எப்பொழுதுமே உம்மை நினைத்துக்கொண்டிருக்கிறார். சீக்ரத்திலேயே அவரும் லக்ஷ்மணனும் வானரர்களின் தலைவனாகிய ஸுக்ரீவனும் இங்கு வருவார்கள். என் பெயர் ஹனுமான் என்பது. என் பராக்ரமத்தினால் ராவணனது தலையில் காலை வைத்து உம்மைக் காணவந்தேன். தாங்கள் எண்ணுவதுபோல் நான் அன்னியன் அல்லன். என்னை நம்புங்கள். அச்சத்தை விடுங்கள்" என்று கூறினார்.

1. दुःखाभिभूतायाः - துக்கத்தினல் துன்புறுத்தப்பட்டுள்ள, तस्याः அவளுடைய, तद्वचनं - அவ்வார்த்தையை, श्रुत्वा - கேட்டு, हरियूथपः - வானரர் கூட்டத்தலைவரான, हनुमान् - ஹனுமார், दुःखात् - தாமும் துக்கமடைந்தவராக, सान्त्वं - ஆறுதல் அளிக்கும், उत्तरं - பதிலை, अब्रवीत् - கூறினர்.

दुःखेन अभिभूता, तस्याः, हरियूथं पाति इति हरियूथपः।
दुःखात्=दुखं प्राप्य।

2. देवि - தேவியே, अहं - நான், रामस्य - ராமருடைய, सन्देशात् - உத்தரவினுலே, तव - தங்களிடம், दूतः- தூதனுக, आगतः வந்திருக்கின்றேன். वैदेहि - ஸீதாதேவியே, रामः - ராமர், कुशली - க்ஷேமமாக, இருக்கின்ருர்; त्वां - உம்மிடம், कौशलं - க்ஷேமத்தை, अब्रवीत् - தெரிவிக்கின்ருர்.

कुशलं अस्य अस्तीति कुशली।
कुशलमेव कौशलम्।
अब्रवीत् अब्रूतां अब्रुवन् Imperf. 3rd sing. of ब्रू II. P.

3. देवि - தேவியே! यः - எவர், ब्राह्मं अस्त्रं - பிரம்மாஸ்திரத்தையும், वेदांश्च - வேதங்களையும், वेद - அறிகின்ருரோ, यः - எவர், वेदविदाम् - வேதப்பொருளை அறிந்தவர்களில், वरः - சிறந்தவரோ, सः - அந்த, दाशरथिः रामः - தசரதகுமாரரான ராமர்; त्वां - உம்மிடம், कौशलं - க்ஷேமத்தை, अब्रवीत् - வினவுகின்ருர்.

ब्रह्मणः इदम् ब्राह्मम्।
वेद विदतुः विदुः Pres. 3rd sing. of विद् II. P.

---

वेदम्-वेदार्थं बिदन्तीति वेदविद :, तेषाम् ।

दशरथस्य अपत्यं पुमान् दाशरथि ; ।

4. **महातेजा :** - மிகுந்த தேஜஸ் உடையவனும், **ते** - உமது, **भर्तु :** கணவரது, **प्रिय :** பிரியமான, **अनुचर :** - பணியாளனும், **शोक सन्तप्त :** துக்கத்தினால் வருந்துகின்றவனு மாகிய, **लक्ष्मण : च** - லக்ஷ்மணனும், **ते** - உமக்கு, **शिरसा** - தன் தலையினால், **अभिवादनं** - நமஸ்காரத்தை, **कृतवान्** - செய்தான்.

महत्, तेज : यस्य स : महातेजा : ।

शोकेन सन्तप्त : शोकसन्तप्त : ।

5. **नरसिंहयो :** மனிதர்களிற் சிறந்த, **तयो :** - அவ்விருவரின், **कुशलं** - க்ஷேமத்தை, **निशम्य** - கேட்டு, **सा देवी** - அந்த ஸீதை, **प्रीति संहृष्ट सर्वांगी** - ஸந்தோஷத்தினால், மயிர்க் கூச்சமடைந்த சரீர முடையவளாக, **अथ** - பிறகு, **हनुमन्तं** - ஹனுமாரிடம், **अब्रवीत्** -கூறினள்.

नरौ सिंहौ इव नरसिंहौ, तयो : ।

प्रीत्या संहृष्टं सर्वांगम् यस्या : सा प्रीति संहृष्ट सर्वांगी ।

6. '**जीवन्तं** - உயிரோடு வாழ்கின்றவரை, **आनन्दः** - ஸந்தோஷமானது, **वर्ष शतादपि** - நூறுவருஷங்களுக்குப் பிறகேனும், **एति** - வந்தடைகின்றது' **इति** - என்ற **इयं** - இந்த, **लौकिकी** - உலகவழக்கிலுள்ள; **गाधा** - பழமொழி, **कल्याणी** - உண்மையானதாக, **मा** - எனக்கு, **प्रतिभाति** - தோன்றுகிறது.

वर्षाणां शतं, तस्मात् ।

एति इत : यन्ति Pres. 3rd sing, of इ. II. P.

लोके विदिता लौकिकी ।

प्रति-भाति भात : भान्ति Pres. 3rd sing. of भा ।

मा. Acc. sing. of अस्मद् ।

बत an interjection.

7. तस्मिन् - அந்த ஹனுமார், तया, ஸீதையை, समागते - ஸந்தித்தபொழுது, अद्भुता - ஆச்சர்யமான, प्रीतिः - நம்பிக்கையானது, उत्पादिता - அவ்விருவருக்கும் உண்டாயிற்று; परस्परेण - ஒருவரை ஒருவர், विश्वस्तौ - நம்புகின்றவர்களாக, तौ - அவ்விருவரும், आलापं - ஸம்பாஷணையை, प्रचक्रतुः - செய்தனர்.

उत्पादिता=उत्पन्ना ।

प्रचकार-चक्रतुः चक्रुः Perf. 3rd. dual. of कृ with प्र.

8. हरियूथपः - வானரர் கூட்டத்தலைவரான, हनुमान् - ஹனுமார், शोकदीनायाः - துக்கத்தினால் எளிய நிலையிலிருக்கின்ற, तस्याः सीतायाः - அந்த ஸீதையின், तद्वचनं - அவ்வார்த்தையை, श्रुत्वा - கேட்டு, समीपं - ஸமீபத்திற்கு, उपचक्रमे - சென்றார்.

शोकेन दीना, तस्याः ।

उप-चक्रमे-चक्रमाते चक्रमिरे Perf. of क्रम् I. A,

9. सः हनुमान् - அந்த ஹனுமார், यथा यथा - எவ்வளவுக்கெவ்வளவு, समीपं - ஸமீபத்தை, उपसर्पति स्म - அணுகினாரோ, तथा तथा - அவ்வளவுக்கவ்வளவு, सा सीता - அச்சீதை, तं - அவரை, रावणं - ராவணனாக, परिशंकते - (स्म) ஸந்தேகித்தாள்.

परिशंकते Pres. 3rd sing. of शंक् to suspect. I. A.

---

नीचनखः भवेः ।

10. अहो - அந்தோ ! अस्य - இவனிடம், मे - என்னால், यत् - எது, कथितं - கூறப்பட்டதோ, इदं - இது, दुष्कृतम् - தகாதது; धिक् - இதை நிந்திக்கவேண்டும்; हि - ஏனெனில், अयं - இவன், रूपान्तरं - வேறு வடிவத்தை, उपागस्य - அடைந்துள்ள, सः रावणः एव - அந்த ராவணனே.

धिक्—Governs a noun in the accusative case.

अन्यं रूपं रूपान्तरं, तत् ।

11. शोककर्शिता - துக்கத்தினால் இளைத்தவளும், अनवद्यांगी - குற்றமற்ற அங்கமுடையவளுமான, सा - அவள், अशोकस्य - அசோகமரத்தின், तां-शाखां - அக்கிளையை, विमुक्त्वा - விட்டு, तस्यां एव धरण्यां - அத்தரையிலேயே, समुपाविशत् - உட்கார்ந்தாள்.

शोकेन कर्शिता - शोककर्शिता ।

अनवद्यं अंगं यस्याः सा अनवद्यांगी ।

विमुक्त्वा - आर्षप्रयोग for विमुच्य ।

समुपाविशत्-अविशत् अविशतां अविशन् ।

Imperf. 3rd sing. of विश् with सम्-उप-आ. VI P.

12. महाबाहुः - பராக்ரம சாலியான, हनुमान् - ஹனுமார், तां - அவளை, दुःखार्ता - துக்கத்தினால் பீடிக்கப்பட்டவளாகவும், भयमोहितां - பயத்தினால், மயங்கியவளாகவும், दृष्ट्वा - கண்டு, तां जनकात्मजां - அந்த ஸீதையை, ततः - பிறகு, अवन्दत - வணங்கினார்.

महान्तौ बाहू यस्य सः, महाबाहुः । दुःखेन आर्ता-दुःखार्ता । भयेन मोहिता भयमोहिता । जनकस्य आत्मजा । ताम् ।

अवन्दत अवन्देतां अवन्दन्त. Imperf. of वन्द् I. A

---

अवन्द्यत. Pass. voice.

13. सा च - அவளும், भयवित्रस्ता - பயத்தினால் நடுங்குகின்றவளாக, एनं - ஹனுமாரை, भूयः மறுபடியும், नैवाभ्युदैक्षत - நிமிர்ந்து பார்க்கவேயில்லை; शशिनिभानना - சந்திரன் போன்ற முகமுடைய, सीता - ஸீதை, वन्दमानं - வணங்குகின்ற, तं - அவரை, दृष्ट्वा பார்த்து, दीर्घं - நெடியதாக, उच्छ्वस्य - பெருமூச்செரிந்து, मधुरस्वरा - இனிய குரலுடையவளாக, वानरं - அந்த ஹனுமாரிடம், अब्रवीत् - கூறினள்.

भयेन वित्रस्ता, भयवित्रस्ता।

अभि उत्. ऐक्षत ऐक्षेतां ऐक्षन्त Imperf of ईक्ष्. I. A.

ऐक्ष्यत. Pass. शशिना तुल्यं, शशिनिभम्-आननं यस्याः सा शशिनिभानना।

वन्दमान Pres. part. of वन्द् I. A.

उच्छ्वस्य. Indec. past. part. of श्वस् with उत्।

मधुरः स्वरः यस्याः सा मधुरस्वरा।

14. त्वं - நீ, मायावी - இயற்கையிலே மாயாவியும், मायां प्रविष्टः - இப்பொழுது மாயையைக் கைக்கொண்டவனுமான, रावणः स्वयं - ராவணனாகவே இருந்து, मे - எனக்கு, भूयः - மேலும், सन्तापं - வருத்தத்தை, उत्पादयसि यदि - உண்டாக்குவாயானால், तत् - அது, न शोभनम् - உசிதமன்று.

माया अस्य अस्तीति मायावी Dec. like गुणिन्।

15. यः - எவன், जनस्थाने - ஜனஸ்தானத்தில், स्वं रूपं - தனது உண்மையான வடிவத்தை, परित्यज्य -

---

शुन्त्रिः भवेः।

விட்டு, **परिव्राजकरूपधृत्** - ஸந்யாஸி வேஷம் தரித்தவனாக, **मया** - என்னால், **दृष्टः** - பார்க்கப்பட்டானோ, **सः रावणः एव** - அந்த ராவணனாகவே, **त्वं** - நீ, **असि** - இருக்கின்றாய்.

**परिव्राजकस्य रूपं धरतीति....धृत्।**

16. **कामरूप** - விரும்பிய வடிவமுடைய, **निशाचर** - அரக்கனே! **उपवास कृशां** - பட்டினியினால் இளைத்தவளும், **दीनां** - எளிய, நிலையிலுள்ளவளும், **सन्तप्तां** - வருந்துகின்ற வளுமான, **मां** - என்னை, **भूयः** - மறுபடியும், **सन्तापयसि** - நீ வருத்துகின்றாய்; **तत्** - அது, **न शोभनम्** - உசித மன்று.

**कामात् रूपं यस्य सः, तस्य संबुद्धिः। निशायां चरतीति निशाचरः, तस्य संबुद्धिः।**

**उपवासेन कृशा, ताम्।**

17. **अथवा** - அல்லது, **यत्** - எது, **मया** - என்னால், **परिशंकितं** - ஸந்தேஹிக்கப்பட்டதோ, **एतत्** - இவ்விஷயம், **एवं न हि** - அவ்வாறு அல்ல; **तव** உம்மை, **दर्शनात्** - கண்டதினால், **मम** - எனது, **मनसः** - மனத்திற்கு, **प्रीतिः** - ஸந்தோஷமானது, **उत्पन्ना** - உண்டாகி இருக்கிறது.

18. **त्वं** - நீர், **रामस्य** - ராமருடைய, **दूतः** தூதராக, **यदि आगतः** - வந்தவராயின், **ते** - உமக்கு, **भद्रं** - நன்மையானது, **अस्तु** - உண்டாவதாக; **हरिश्रेष्ठ** - வாநர ச்ரேஷ்டரே, **त्वां** - உம்மிடம், **पृच्छामि** - (ராமரது செய்தியை) கேட்கின்றேன்; **हि** - ஏனெனில், **मे** - எனக்கு, **रामकथा** - ராமரைப்பற்றியச் செய்தி, **प्रिया** - பிரியமானது.

**अस्तु स्तां सन्तु**. Imper. 3rd sing of **अस्**. II P.

हरिषु श्रेष्ठः तस्य संबुद्धिः।

रामस्य कथा-रामकथा।

19. **वानर** - வானரரே! **प्रियस्य** - அன்பரான, **रामस्य** - ராமரது, **गुणान्** - குணங்களை, **मे** - எனக்கு, **कथय** - சொல்வீராக; **सौम्य** - நற்தோற்றமுடையவரே, **यथा** - எவ்வாறு, **रयः** - பிரவாகத்தின் வேகமானது, **नदीकूलं** - நதியின் கரையை அபகரிக்குமோ, **तथा** - அவ்வாறு, **मे-चित्तं** - எனது மனத்தை, **हरसि** - கவர்கின்றீர்.

नद्याः कूलम्, तत्।

हरसि Pres. 2nd sing of हृ (हर्) to take away I. P.

20. **अहो** - ஆஹா! **स्वप्नस्य** - கனவின், **सुखता** - சுகம்தான் என்ன! **चिराहृता** - வெகுநாள் முன் கவரப்பட்ட, **अहं** - நான், **एवं** - இவ்வாறு, **राघवेण** - ராமரால், **प्रेषितम्** - அனுப்பப்பட்ட, **वनौकसं नाम** - வானரனை, **पश्यामि** - காண்கின்றேன்.

ராமரிடமிருந்து தூதன் வருவது எளிதல்ல என நினைத்து தான் காண்பது கனவு என எண்ணி, அதிலும் ஒரு இன்பமுண்டு என்று கருதுகிறாள் ஸீதை. இதனின்றும் ஸீதையின் மன நிலைபுலப்படும்.

चिरं आहृता चिराहृता। वनं ओकः यस्य सः वनौकाः, तम्।

21. **सहलक्ष्मणं** - லக்ஷ்மணனுடன் கூடிய, **वीरं** - வீரரான, **राघवं** - ராமரை, **स्वप्नेऽपि** - கனவிலாயினும், **अहं** - நான், **पश्येयं यदि** - காண்பேனாயின், **न अवसीदेयम्** - நான், இறக்கமாட்டேன்; (ஆனால்) **स्वप्नोऽपि** - தூக்கம்கூட, **मम** - என்னிடம், **मत्सरी** - பொறாமை கொண்டுள்ளது.

(க-து) 'கனவில் ராம லக்ஷ்மணர்களைக் கண்டாலாவது நான் உயிர் வாழ்வேன். எனக்குக் கனவும் உண்டாவதில்லை, ஏனெனில்

---

उद्यन्तं सूर्यं न पश्येत्।

கனவு உண்டாக வேண்டுமானால் தூக்கம் வேண்டும். எனக்குத் தூக்கமே வருவதில்லை. அதுவும் என்னிடம் பொறுமை கொண்டது போல் இருக்கிறது."

**स्वप्नः** - கனவு; தூக்கம் என்ற இரண்டு பொருள் உண்டு.

**लक्ष्मणेन सह वर्तते इति सहलक्ष्मणः ।**
**रघोः गोत्रापत्यं पुमान्, राघवः, तम् ।**
**अव-सीदेयम् सीदेव सीदेम** Pot of **सद् ।**
**मत्सरः अस्य अस्तीति मत्सरी.** Mas. Dec. like. **गुणिन् ।**

22. **अहं** - நான், **इमं** - இதை, **स्वप्नम्** - ஸ்வப்னமாக, **न मन्ये** - கருதவில்லை; **स्वप्ने** - கனவில், **वानरं** - குரங்கை, **दृष्ट्वा** - பார்த்து, **अभ्युदयः** - நன்மையானது, **प्राप्तुं** - அடைவதற்கு, **न शक्यः** - முடியாது; **मम** - என்னால், **अभ्युदयः** - நன்மையானது, **प्राप्तः** - அடையப்பட்டுள்ளது.

(க - து) "கனவில் குரங்கைப்பார்ப்பது நல்லதல்ல, இப்பொழுது நன்மை பெறப்பட்டுள்ளதால் நான் காண்பது கனவில்லை"

23. **अयम्** - இது, **चित्तमोहः** - மதிமயக்கமாக, **किंनु स्यात्** - இருக்குமோ? **अयं** - இது, **वातगतिः भवेत्** - வாத வியாதியின் சேஷ்டையாக இருக்குமோ? **वा** - அல்லது, **उन्मादजः** - உன்மாதத்திலுண்டான, **विकारः स्यात्** - மனமாறுபாடாக இருக்குமோ? (அல்லது), **इयं** - இது, **मृगतृष्णिका** - (கானல் நீர் போன்ற) வெளித் தோற்றமோ?

கடல் கடந்து ஒருவன் வருவது எதிர்பார்க்கக் கூடிய தன்றாகையால் தான் காண்பதைப் பலவிதத்திலும் ஸந்தேஹிக்கின்றாள் வைதேஹி.

"மதிமயக்கமோ, அல்லது உபவாஸம் முதலியவற்றால் உண்டான வாதம் முதலியவற்றின் பலனோ. அல்லது, அடிக்கடி நினைத்ததினாலுண்டான மனத்தோற்றமோ, அல்லது கானலை தண்ணீராக நினைப்பதுபோல் ஒன்றை மற்றொன்றாகக் காணுகின்றேனோ?"

---

DO NOT SEE THE RISING SUN.

चित्तस्य मोहः, चित्तमोहः।
उन्मादात् जायते इति उन्मादजः।

24. अथवा - அல்லது, अयं - இது, न उन्मादः - உன்மாதமல்ல; उन्मादलक्षणः - உன் மாதத்திற்கான அறிகுறிகளையுடைய, मोहोऽपि न - மோஹமும் அல்ல; अहम् - நான் आत्मानं - என்னையும், इमं - वनौकसं च - இவ்வானரரையும், संबुध्ये - நன்கு உணர்கின்றேன்.

उन्मादस्येव लक्षणानि यस्य, सः उन्मादलक्षणः।
सं-बुध्ये बुध्यावहे बुध्यामहे Pres. 1st sing. of बुध्. IV, A.

25. सीता - ஸீதை, इति-एवं - என்றிவ்வாறு, बलाबलं - (காரணங்களின்) பலாபலத்தை, संप्रधार्य - நன்கு ஆலோசித்து, रक्षसां - ராக்ஷஸர்களுக்கு, कामरूपत्वात् - விரும்பிய வடிவு கொள்ளும் சக்தி இருப்பதால், तं - அவரை, राक्षसाधिपं - ராவணனாகவே, मेने - எண்ணினாள்.

कामात् रूपं यस्य, तस्य भावः तस्मात्।
राक्षसानां अधिपः, तम्।
मेने मेनाते मेनिरे-Perf. 3rd sing of मन् IV A.

26. तदा - அப்பொழுது, तनुमध्यमा - மெல்லிய இடையையுடைய, जनकात्मजा - ஜனக குமாரியான, सा, सीता - அந்த ஸீதை, एतां बुद्धिं - இத்தகைய எண்ணத்தை, कृत्वा - எண்ணி, अथ - பிறகு, वानरं - அவ்வானரரிடம், न प्रति व्याजहार - பதில் பேசவில்லை.

तनु मध्यमं यस्याः, सा तनुमध्यमा।
प्रति-वि-आ-जहार जह्रतुः जह्रुः Perf. 3rd sing of हृ with प्रति-वि-आ।
व्याजह्रे Pass. voice.

अस्तं यन्तं सूर्यं न पश्येत्।

27. **मारुतात्मज:** *வாயுகுமாரராகிய,* **हनुमान्** - *ஹநுமார்,* **सीताया:** - *ஸீதையின்,* **चिन्तितं** - *எண்ணத்தை,* **बुद्ध्वा** - *அறிந்து,* **तदा** - *அப்பொழுது,* **श्रोत्रानुकूलै:** - *காதிற்கினிய,* **वचनै:** *வார்த்தைகளால்,* **तां** - *அவளை,* **संप्रहर्षयत्** - *மகிழ்வித்தார்.*

**श्रोत्रस्य अनुकूलानि, तै: ।**
**संप्रहर्षयत् - आर्ष प्रयोग** for **संप्राहर्षयत्** Caus Imperf of **हृष् ।**

28. *ராமர்,* **आदित्य: इव** - *சூரியன்போல்,* **तेजस्वी** - *ஒளி பொருந்தியவர்;* **शशी यथा** - *சந்திரன்போல்,* **लोककान्त:** - *உலகிற்கு விருப்பமானவன்;* **देव: वैश्रवणो यथा** - *தேவனை குபேரன்போல்,* **सर्वस्य लोकस्य** - *எல்லா உலகிற்கும்,* **राजा** - *அரசன்.*

**तेज: अस्य अस्तीति तेजस्वी ।**
**शश: अस्य अस्तीति शशी ।**

29. **विष्णु: यथा** - *விஷ்ணுபோல்,* **विक्रमेण उपपन्न:** - *பராக்ரமத்துடன் கூடியவர்;* **महायशा:** *பெரும்புகழுடையவர்;* **देव: वाचस्पति: यथा** - *தேவரான ப்ரஹஸ்பதிபோல்,* **सत्यवादी** - *உண்மை பேசுபவர்;* **मधुरवाक्** - *இனிய பேச்சுடையவர்.*

**सत्यं वदतीति सत्यवादी ।**
**मधुरा वाक् यस्य, स: मधुरवाक् ।**

30. **मूर्तिमान्** - *வடிவெடுத்த,* **कन्दर्प: इव** - *மன்மதன்போல்,* **रूपवान्** - *அழகுடையவர்,* **सुभग:** - *தோற்றப் பொலியுடையவர்,* **श्रीमान्** - *காந்தி பொருந்தியவர்,* **स्थानक्रोध:** - *தக்க இடத்தில் கோபம் கொள்ளுபவர்;* **प्रहर्ता** -

தண்டிப்பவர்; **लोके** - உலகில், **श्रेष्ठः** - சிறந்த, **महारथः** - மஹாரதர்.

**स्थाने क्रोधः यस्य सः स्थानक्रोधः।**

**महारथः—**

**"एको दशसहस्राणि योधयेत् यस्तु धन्विनाम्।**
**शस्त्र शास्त्र प्रवीणश्च विज्ञेयः स महारथः॥"**

31. **महात्मनः** - மாஹாத்மாவான, **यस्य** - எவருடைய, **बाहुच्छायां** - கை நிழலை, **अवष्टब्धः** - ஆச்ரயித்ததாக, **लोकः** - இவ்வுலகம் இருக்கிறதோ, **सः** அத்தகைய பெருமையுடைவர் ராமர்.

**बाह्वोः छाया, ताम्।**

32. **राघवं** - ராமரை, **आश्रमपदात्** - ஆச்ரமத்தினின்றும், **मृगरूपेण** - சிறந்த ஒருமான் மூலம், **अपकृष्य** - இழுத்துப்பின், **शून्ये** - ஒருவருமில்லாத இடத்தினின்றும், **येन** - எந்த ராவணனால், **अपनीता** - கொண்டுவரப்பட்டவளாக, **असि** - இருக்கின்றீர்களோ, **तस्य** - அவனுக்கு, **यत्** - **फलं** - எந்தப்பலன் வரப்போகின்றதோ, **(तत्)** அதை, **द्रक्ष्यसि** - (சீக்ரமே) தாங்கள் காண்பீர்கள்.

**प्रशस्तः मृगः; मृगरूपः, तेन।**

33–34. **वीर्यवान्** - வீர்யமுள்ள, **यः** எந்த ராமர், **रोषप्रयुक्तैः** - கோபத்தினால் பிரயோகிக்கப்பட்டவைகளும், **ज्वलद्भिः** ஜ்வலிக்கின்ற, **पावकैः इव** - அக்னிபோல் இருப்பவையுமான, **इषुभिः** பாணங்களினால், **नचिरात्** - சீக்ரமே, **रावणं** - ராவணனை, **संख्ये** - யுத்தத்தில், **वधिष्यति** - கொல்லப்போகின்றாரோ, **तेन** - அவரால், **प्रेषितः** அனுப்பப்பட்ட, **दूतः** தூதனாகிய, **अहं** - நான், **त्वत्सकाशं** - உமது ஸமீபத்திற்கு, **इह** - இங்கு **आगतः** - வந்திருக்கிறேன்; **त्वद्वियोगेन** - தங்களது பிரிவினாலுண்டான, **दुःखार्तः** - துக்

---

न उदके स्वं रूपं निरीक्षेत।

கத்தினால் வருந்துகின்ற, **सः** அவர், **त्वां** - உம்மிடம் **कौशलं** - க்ஷேமத்தை, **अब्रवीत्** - கேட்கின்றார்.

**नचिरात्** - one word.
'**वधिष्यति**' **आर्षप्रयोग** for **हनिष्यति** ।
**वीर्यं अस्य अस्तीति वीर्यवान्** ।
**इषुः** mas. also.

35. **महातेजाः** - மிகுந்த தேஜஸ் உடையவனும், **सुमित्रा-आनन्दवर्धनः** ஸுமித்ரைக்கு ஆனந்தம் விளைவிப்பவனும், **महाबाहुः** - வீரனுமான, **सः** - அந்த, **लक्ष्मणश्च** - லக்ஷ்மணனும், **त्वां** - உம்மை,, **अभिवाद्य** - வணங்கி, **कौशलं** - க்ஷேமத்தை, **अब्रवीत्** - வினவுகின்றார்.

**महत् तेजः यस्य, सः महातेजाः** ।
**सुमित्रायाः आनन्दं वर्धयतीति सुमित्रानन्दवर्धनः** ।

36. **देवि** - தேவியே **रामस्य** - ராமரது, **सखा** - நண்பனும், **वानरमुख्यानां** - வானரச்ரேஷ்டர்களுக்கு, **राजा** - அரசனுமாகிய, **सुग्रीवः नाम** - ஸுக்ரீவன் என்ற, **वानरः** - வானரனும், **त्वां** - உம்மை, **कौशलं अब्रवीत्** - க்ஷேமம் விசாரிக்கின்றார்.

Note the Declension of '**सखा**'
**शोभना ग्रीवा यस्य, सः सुग्रीवः** ।

37. **ससुग्रीवः** - ஸுக்ரீவனுடன் கூடியவரும், **सलक्ष्मणः** - லக்ஷ்மணனுடன் கூடியவருமான, **रामः** - ராமர், **नित्यं** - எப்பொழுதும், **त्वां** - உம்மை, **स्मरति** - நினைக்கின்றார். **वैदेहि** - ஸீதையே, **राक्षसीवशम् आगता** - ராக்ஷஸிகளின் வசத்திலிருக்கின்றவளாயினும் **दिष्ट्या** - தெய்வாதீனமாக, **जीवसि** - உயிர்வாழ்கின்றீர்.

**सुग्रीवेण सह वर्तते इति ससुग्रीवः** ।

दिष्ट्या - Indec.

38, वानर कोटीनां - வானரக் கூட்டங்களின், मध्ये - நடுவில், महाबलं - மிகுந்த பலமுடைய, रामं - ராமனையும், लक्ष्मणं च - லக்ஷ்மணனையும், अमितौजसं - அளவற்ற பல முடைய, सुग्रीवं च - ஸுக்ரீவனையும், न चिरात् - சீக்கிரத்தி லேயே, द्रक्ष्यसे - காணப்போகின்றீர்.

महत् - बलं यस्य, सः महाबलः।

अमितं ओजः यस्य, सः अमितौजाः, तम्।

द्रक्ष्यसे-आर्षप्रयोग for द्रक्ष्यसि।

39. अहं - நான், सुग्रीवसचिवः ஸுக்ரீவனது மந்திரி; हनुमान् नाम वानरः - ஹனுமான் என்ற வானரன்; महोदधिं - பெருங்கடலை, लंघयित्वा - கடந்து, लंकां नगरीं - லங்கை நக ரத்தை, प्रविष्टः - பிரவேசித்துள்ளேன்.

40. अहं - நான், पराक्रमं - பராக்ரமத்தை, समाश्रित्य - கைக்கொண்டு, दुरात्मनः - துராத்மாவான, रावणस्य - ராவ ணனுடைய, मूर्ध्नि - தலையில், पदन्यासं - அடிவைப்பை, कृत्वा - செய்து, त्वां - தங்களை, द्रष्टुं - காண்பதற்கு, उपयातः வந் திருக்கின்றேன்.

पदस्य न्यासः पदन्यासः, तम्।

दुष्टः आत्मा यस्य, सः दुरात्मा, तस्य।

41. देवि - தேவியே, यथा - எவ்வாறு, मां - என்னை, अवगच्छसि - அறிகின்றீரோ, तथा - அவ்வாறு, अहं - நான், न अस्मि - இல்லை, एषा - இந்த, विशङ्का - ஸந்தேகம், त्यज्यताम् - விடப்படட்டும்; वदतः - பேசுகின்ற, मम - என்னை, श्रद्धत्स्व - நம்புவீராக.

विशङ्कां त्यज. Active voice.

श्रद्-धत्स्व दधाथां धद्ध्वम् Imeperative 2nd sing of धा with श्रद् III. A.

34-ஆவது ஸர்க்கம் முற்றிற்று

न नग्नः स्नानं आचरेत।

# ॥ श्रीमन्महाभारतम् ॥

பாரதம் என்பதற்குப் பரதனுடைய வம்சத்தினரைப்பற்றிய இதிஹாஸம் எனப்பொருள். இப்பரதன் சந்திரவம்சத்தில் வந்த துஷ்யந்தன் மகன். இவனது வம்சத்தில் தோன்றியவர் பலராயினும் அவர்களில் மிகவும் பிரசித்தி பெற்றவர்கள் பாண்டவர்களும், துரியோதனாதியரும் ஆவர். அவர்களுடைய வரலாற்றைக் கூறுவதால் இது பாரதம் என்று வழங்கலாயிற்று,

வர்ணதர்மம், ஆச்ரம தர்மம் முதலிய பல தர்மங்கள் இதில் கூறப்பட்டிருப்பதால் இதை வேதங்களோடு ஒப்ப ஐந்தாம் வேதம் எனக் கூறுகின்றனர். **भारतं पञ्चमो वेदः** என்பதை நோக்குக. உபநிஷத்துக்களின் ஸாரமாகிய 'கீதையும்' 'ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம' ஸ்தோத்திரமும் இதில் இருக்கின்றன. இதில் கூறப்பட்ட விஷயங்கள் மற்ற நூல்களில் காணப்படும். இதில் கூறப்படாதது வேறு நூல்களில் காண இயலாது என்றும் கூறுவர்.

**यदिहास्ति तदन्यत्र यन्नेहास्ति न तत् क्वचित्** என்பது மேற்கூறியதைப் புலப்படுத்தும். தேவர்கள், ஒரு சமயம் வேதங்களையும் பாரதத்தையும் சீர்தூக்கிப்பார்த்த பொழுது பாரதம் மிக்க பெருமை பொருந்தியதாகக் காணப்பட்டதாம்.

மேற்கூறிய காரணங்களினால் இதற்கு **महा** என விசேஷணம் கொடுக்கப்பட்டிருக்கிறது. **महत्त्वात् भारतत्वाच्च महाभारतमुच्यते ।** இப்பாரதத்திற்கு **जय** எனவும் பெயர்

உண்டு. படிப்பவர்களுக்கும், வீட்டில் பாரதத்தை வைத்திருப்பவர்களுக்கும்கூட ஜயத்தை கொடுப்பதால் அப்பெயர் ஏற்பட்டது. 'भारतं भवने यस्य तस्य हस्तगतो जयः '।

கணித சாஸ்திரங்களில் கூறிய கடபயாதி முறைப் படி जय என்பதற்குப் பதினெட்டு என்பது பொருள். பதினெட்டுப் பர்வங்களை யுடையதும், பதினெட்டு அக்ஷௌஹிணீ சேனைகளுக்குப் பதினெட்டு நாள் நடந்த போரைத் தெரிவிப்பதுமாகிய இம்மஹா பாரதத்திற்குப் பதினெட்டு என்று பொருள் தரும்படி ஜய என்பது பெயராக அமைந்திருக்கிறது. மஹா பாரதத்தின் உட்பிரிவுகள் பர்வங்கள் எனப்படுகின்றன. ஆதி பர்வம், வன பர்வம், விராட பர்வம், பீஷ்மபர்வம், த்ரோண பர்வம், கர்ணபர்வம், சல்யபர்வம், ஸௌப்திகபர்வம் ஸ்த்ரீபர்வம், சாந்திபர்வம், ஆநுசாஸநிகபர்வம், அச்வமேதிக பர்வம், ஆச்ரமவாஸிகம், மௌஸலம், மஹாப்ரஸ்தாநிகம், ஸ்வர்க்காரோஹணம், எனப் பதினெட்டுப் பர்வங்களையுடையது. பர்வங்களின் உட்பிரிவுகள் அத்யாயங்கள். இது 125000 சுலோகங்கள் கொண்டது.

மஹா பாரதத்தை செய்த வியாஸர், பராசர மஹர்ஷிக்கும் ஸத்யவதிக்கும் பிறந்தவர். இவர் கலி-த்வாபர யுகங்களின் ஸந்தியில் இருந்தார் எனக் கூறுவர். இவர் இலந்தை நிறைந்த தீவில் பிறந்ததால் 'பாதராயணர்' எனவும், 'த்வைபாயனர்' எனவும், வேதங்களை வகுத்ததால் 'வேத வ்யாஸர்' எனவும் பெயர் பெற்றார். 'க்ருஷ்ணர்' எனவும் இவருக்கு ஒரு பெயர் உண்டு. பதினெட்டு புராணங்களையும் பிரம்ம ஸூத்திரங்களையும் இயற்றி பாரதத்தைத் தமது சிஷ்யரான வைசம்பாயனர்க்கு முதலில் உபதேசித்தார்.

---

न मूत्रं पथि कुर्वीत ।

## ॥ मंगलश्लोकः ॥

**नारायणं** - நாராயணனையும், **नरोत्तमं** - புருஷ ச்ரேஷ்டரான, **नरं चैव** - நரனையும் (அர்ஜுனனையும்), **सरस्वतीं देवीं** - ஸரஸ்வதீ தேவியையும், **व्यासं** - வ்யாஸ மஹர்ஷியையும், **नमस्कृत्य** - நமஸ்கரித்துவிட்டு, **ततः** - பிறகு, **जयं** ஜயத்தை (மஹாபாரதத்தை), **उदीरयेत्** - சொல்லவேண்டும்.

முன் ஒரு காலத்தில், குரு சிஷ்யர்களின் தர்மத்தை உலகத்தினருக்குக் காட்டவேண்டி, விஷ்ணுவே நாராயணன் என்ற குருவாகவும், நரன் என்ற சிஷ்யனுகவும் அவதாரம் செய்து பதரிகாச்ரமத்தில் தர்மத்தை உபதேசித்தார். அவ்விரு மூர்த்திகளே பின்பு கிருஷ்ணனுகவும் அர்ஜுனனுகவும் அவதரித்தனர். ஆதலால் அர்ஜுனன் நரன் எனப்படுகிறுன். இவ்வவதாரத்திலும் க்ருஷ்ணன் நரனுக்குக் கீதோபதேசம் செய்தார்.

# ॥ आदिपर्व ॥

## முன்னுரை:

பரத குலத்துதித்த திருதராஷ்டிரனுக்கு துர்யோதனன் முதலான நூறு புத்ரர்களும், பாண்டுவிற்கு யுதிஷ்டிரர் முதலான ஐந்து புத்திரர்களும் இருந்தனர். இவர்களின் பாட்டனுரான பீஷ்மர், கிருபாசாரியர் என்பவரை இவர்களுக்கு வில்வித்தை கற்பிக்கும் ஆசிரியராக ஏற்படுத்தியிருந்தார். ஒரு சமயம் அப் பிள்ளைகள் பந்து விளையாடிக்

கொண்டிருந்தபொழுது, அவர்களது பந்தும், ஒரு மோதிரமும் கிணற்றில் விழுந்துவிட்டது. அதை எடுக்க முடியாமல் அவர்கள் தவித்துக் கொண்டிருந்த பொழுது அவ்வழியே வந்த துரோணர், துடைப்பைக் குச்சிகளை ஒன்றன் பின் ஒன்றாக அஸ்திரமாக உபயோகித்து, கிணற்றினின்றும் பந்தையும், மோதிரத்தையும் எடுத்துக் கொடுத்தார். இவ்வதிசயச் செயலை ராஜ குமாரர்கள், தங்கள் பாட்டனாரான பீஷ்மரிடம் தெரிவிக்க, அவர் துரோணரை அழைத்து தம் பேரன்களுக்கு ஆசிரியராக இருக்கும்படி வேண்டினார்.

## 142-ஆவது அத்யாயம்

### கதாஸங்கிரஹம் :

துரோணர் வேறு ஒரு ஆசிரியர் இருக்கும்பொழுது நாம் வருவது உசிதமில்லை என்று கூறவும், பீஷ்மர், இருவருமே ஆசிரியராக இருக்கலாம் எனக் கூறித் துரோணரை நிறுத்திக்கொண்டார். த்ரோணரும் அப்பிள்ளைகளை சிஷ்யராக ஏற்றுக்கொண்டு நன்கு கற்பித்தார். ஒரு சமயம் அவர், அப்பிள்ளைகளிடம், வில்வித்தை கற்றபின், அவரது மனத்துள்ள ஒரு காரியத்தை செய்து தர வேண்டுமெனக் கேட்ட பொழுது, மற்றவர்கள் சும்மா இருந்தனர். அர்ஜுனன் ஒருவனே செய்வதாக வாக்களித்தான். அதனால் மனம் மகிழ்ந்த அவர் அவனை அன்புடன் தழுவி, தம் மகன் அசுவத்தாமனுடன் நட்புடன் இருக்கும்படிக் கூறினார்.

துரோணரின் பெருமை அறிந்து, பல நாட்டு அரசர் குமாரர்களும் கர்ணன் முதலியவரும். கல்வி கற்கவந்தனர். அவர்கள் எல்லோரிலும் அர்ஜுனன் தலை சிறந்து விளங்கினான். தம் மகனுக்குச் சில மந்திரங்களை உபதேசிக்கக் கருதிய துரோணர், அசுவத்தாமனை தனியே சந்திப்பதற்காக ஒரு உபாயத்தைக் கைக்கொண்டார். மற்ற சிஷ்யர்களுக்கு வாய் குறுகிய பாத்திரத்தையும், அசுவத்தாமனுக்கு வாய கன்ற பாத்திரத்தையும் கொடுத்து, நீர் கொண்டுவரச் சொன்னார். வாயகன்ற பாத்திரத்தில் ஜலம் புகுவது எளிதாகையால். அசுவத்தாமன் மற்றவர்கள் வருவதற்கு முன்னமே வந்து மந்திரங்களை அறிந்து கொண்டான். இதை அறிந்த அர்ஜுனன், வருணாஸ்திரத்

திஞல் கமண்டலுவை நிரப்பிக்கொண்டு அசுவத்தாமனுடன் வந்தான். இச்செய்கை, அர்ஜுனனுக்குக் கல்வியிலுள்ள ஆர்வத்தைக் காட்டியது.

ஒரு சமயம் துரோணர் சமையற்காரனிடம், 'இருட்டில் அர்ஜுனனுக்குச் சாப்பாடு போடாதே' என்று சொல்லி இருந்தார். ஒரு நாள் சாப்பிடும்பொழுது விளக்கு அணையவும், அர்ஜுனன் சாப்பிடுவதை நிறுத்தாமல் சாப்பிட்டுக்கொண்டே இருந்தான். இது வரையில் பகலில் மாத்திரமே வில்வித்தை பயின்ற அர்ஜுனன் பழக்கத்திஞல் இரவில் இருட்டிலும் பயில முடியுமென உணர்ந்து இரவிலும் பயின்ருன். அவனது நாண்கயிற்றின் சத்தத்தைக் கேட்டுத் துரோணர் எழுந்து வந்து, அவனது ஊக்கத்தைப் புகழ்ந்து, தழுவி, "குழந்தையே! உன்னைப்போல் வேருெரு வில்லாளி இல்லாதபடி உனக்குப் பயிற்சி அளிப்பேன்" என வாக்குறுதி அளித்தார். குருவின் அனுக்ரஹம் பெற்றதால் அர்ஜுனனும் மகிழ்ச்சியுற்ருன்.

ஒரு சமயம் வேடர் மகனுகிய ஏகலவ்யன் என்பவன், துரோணரிடம் வந்து தன்னை சிஷ்யஞக ஏற்கும்படி வேண்டவும், துரோணர் அவனை ஏற்பது ராஜகுமாரர்களுக்கு விருப்பமாக இராது என்ற காரணத்தால் ஏற்காது, "அவன் வீரனுவான்" என வாழ்த்தி அனுப்பிஞர். ஏகலவ்யனும் த்ரோணரையே குருவாகக் கருதி, அவர் போன்ற மண் பிரதிமை செய்து, பூஜித்து அஸ்த்ர அப்யாசம் செய்து சிறந்த வில்லாளியாக ஆஞன்.

ஒரு சமயம் பாண்டவர்களும் கௌரவர்களும் வேட்டையாடச் சென்றனர். அகஸ்மாத்தாக அவர்களுடன் சென்ற நாய் ஒன்று காட்டில் ஏகலவ்யனைப்பார்த்துக் குரைக்கவும், ஏகலவ்யன் அந்த நாயைக் கொல்ல விரும்பாமல், தனது அஸ்த்திரத்திறமை விளங்க, அந்நாயின் வாயில் எழு பாணங்களை, ஒரே சமயத்தில் பிரயோகித்தது போல் பிரயோகித்துக் கொத்தாக அதன் வாயில் இருக்கச் செய்தான். பாணங்கள் வாயில் இருந்தனவேயின்றி நாய்க்குத் துன்பம் ஒன்றுமில்லை. அது குரைக்க முடியாது இருந்தது. இவ்வதிசயத்தைக்கண்ட பாண்டவர்கள் ஏகலவ்யனைக்கண்டு அவனை யார் என விசாரிக்கவும், அவன் தன்னைத் துரோணரது சிஷ்யஞகக் கூறிக்கொண்டான். பிறகு பாண்டவர்கள் துரோணரிடம் இவ் வரலாற்றைக் கூறினர்.

ஆஞல் அர்ஜுனன் தனிமையில் துரோணரிடம் சென்று, "ஸ்வாமின், என்னை விடச் சிறந்த வில்லாளி இல்லாதபடி என்னைப் பயில்

விப்பதாகக் கூறினீர்கள். சிறந்த ஏகலவ்யன் தங்களது சிஷ்யன் இருக்கின்றனே, அது எப்படி?" என்று கேட்டான். துரோணர் அர்ஜுனனை அழைத்துக்கொண்டு வனம் சென்று ஏகலவ்யனைக்காணவும், அவன் அவருடைய கால்களில் வீழ்ந்து வணங்கித் தன்னை அவரது சிஷ்யனாகக் கூறிக்கொண்டான். துரோணர் 'சிஷ்யனாயின், குரு தக்ஷிணை தரவேண்டுமே' என, ஏகலவ்யன் எதையும் தருவதாகக் கூறினான். பலம் குறைந்தவனாக அவனைச் செய்யக் கருதிய துரோணர் அவனது வலது கை கட்டை விரலைத் தக்ஷிணையாகக் கேட்டார். ஏகலவ்யன் சிறிதும் மனம் தளராமல் முன்னிருந்ததுபோன்ற மன மகிழ்ச்சியுடன் தாமதமின்றி விரலை வெட்டிக் கொடுத்தான். ஏகலவ்யன்பாணங்களைப் பிரயோகித்தானாயினும் முன்போல் வேகமுடையவனாக இல்லை. அர்ஜுனனுக்கும் மன ஆறுதல் நேர்ந்தது. துரோணரும் அர்ஜுனனுக்குத்தந்த வாக்குறுதியை நிறைவேற்றியவரானார்.

துர்யோதனனும், பீமனும் கதாயுத்தத்திலும், நகுல ஸஹதேவர்கள் கத்திச்சண்டையிலும், யுதிஷ்டிரர் தேர்ச் சண்டையிலும், கெட்டிக் காரர்களாக இருந்தனர். அர்ஜுனனோ எல்லா வற்றிலுமே திறமை பெற்றிருந்தான். ஒரு சமயம் இவர்களது ஆயுத ஞானத்தைப் பரீக்ஷிக்க விரும்பிய அவர், சிற்பிகளைக் கொண்டு, ஒரு பாஸ பக்ஷியைச் செய்து, ஒரு மரத்தின் நுனியில் வைத்து, குமாரர்களை அழைத்து, தான் கூறும்பொழுது பறவையின் தலையைக் கீழே தள்ள வேண்டுமென்றும், ஒவ்வொருவராகக் கட்டளையிடுவதாகவும் கூறினார். முதலில் யுதிஷ்டிரரைக் கூப்பிட்டு, பறவையைக் குறிபார்க்கச் சொல்லியபின், "யுதிஷ்டிர, பறவை, மரம் உன் சகோதரர்கள் எல்லோரையும் காண்கின்றாயோ" என்று கேட்டார். யுதிஷ்டிரர் எல்லாவற்றையும் பார்க்கிறேன்' என்று கூறிய பொழுது உன்னால் இப்பறவையை அடிக்க முடியாது, அப்புறம் செல்" என்று கூறி விலக்கினார். இவ்வாறே எல்லோரும் இகழப்பட்டு விலகிச் சென்றனர்.

## குறிப்பு : துரோணர்:

மஹாபாரதத்தில் உள்ள பல கதைகளில் சிறந்து விளங்குவது ஏகலவ்யன் சரிதம். இதில் முக்யமாக இருப்பவர் துரோணர், அர்ஜுனன், ஏகலவ்யன் என்ற மூவராவர். இம் மூவரின் குணாதிசயங்களும் நன்கு அறிந்து போற்றத்தக்கவையாகும்.

துரோணர், வேறு ஒரு ஆசிரியர் இருக்கும்பொழுது, தான் ஆசிரியராக வருவது முறையன்று எனக் கூறியது, அவரது பெருந்தன்மையைக் காட்டியது. அப்பொழுது அவர் மிக ஏழையாக இருந்தார். ஆயினும் அவர் தம்மால் மற்றவர் வேலை இழக்கக் கூடாதென எண்ணி ஆசிரியர் பதவியை ஏற்க மறுத்தார். வித்யையைக் கற்பித்த

பொழுது தம் மகனுக்கு ரஹஸ்யத்தில் சில மந்திரங்களைக் கற்பிக்க முற்பட்டாராயினும், அர்ஜுனனது விடா முயற்சியையும், கல்வியில் ஊக்கத்தையும் கண்டபொழுது, அவனிடம் அதிகம் அன்புகொண்டு தன் மகனைக் காட்டிலும் அவனைச் சிறந்த வீரனாகச் செய்ய உறுதி கொண்டார். அவ்வாறே செய்யவும் செய்தார். ராஜ குமாரர்களிடம் கொண்ட தாக்ஷிண்யத்தினால் ஏகலவ்யனை ஏற்றுக்கொள்ளா விடினும், அவனுடைய பக்தியை மெச்சி, "நீ, எனது சிஷ்யன்தான். நீ அஸ்த்ரவித்தையில் சிறந்தவனாவாய்" என அனுக்ரஹித்தார். முடிவில், அர்ஜுனனுக்கு தாம் கொடுத்திருந்த வாக்குறுதியை நிறைவேற்றுவதற்காக ஏகலவ்யனது கட்டைவிரலை வாங்கும்படியான நிர்ப்பந்தம் அவருக்கு ஏற்பட்டது. அவர் தர்மசங்கடத்தில் சிக்கியதைக் காண்பவர்களுக்கு அவரிடம் இரக்கமே உண்டாகும். அவ்வாறு அவர் கேட்டு வாங்கியதால் ஏகலவ்யனது புகழ் ஓங்கியது. அவர் கடுமையாக குரு தக்ஷிணை கேட்டிராவிடில் ஏகலவ்யனுக்கு இவ்வளவு புகழ் நேருமோ? அவருக்குப் பிரியமான இரண்டு சிஷ்யர்களும் புகழ் பெற்றனர். அர்ஜுனனுக்கு அவர் செய்த உதவி ஒருவகை. ஏகலவ்யனுக்கு அவர் செய்த உதவி மற்றொரு வகை. இவ்விரண்டிற்கும் வேறுபாடு காணப்படினும் குருவினால் இருவரும் நன்மையே பெற்றனர். அர்ஜுனன் புகழ் உள்ளவரை ஏகலவ்யன் புகழும் நிலைத்து நிற்கும்; அதற்குக் காரணம் துரோணர்தான்.

## அர்ஜுனன் :

இவன் குருவினிடம் விசேஷமான பிரியம் வைத்திருந்தான். குரு தனக்குக்கூறுது மந்திரங்களைத் தம் மகனுக்குக் கூற முற்படுகின்றார் என்று அறிந்த பொழுதும் கூட, குருவினிடம் கோபம் கொள்ளாது அதிகம் பக்தி செய்தான். குரு தாம் விரும்பிய காரியத்தைச் செய்ய வேண்டுமெனக்கேட்டபொழுது, மற்றவர்கள் பேசாதிருந்தனர். அர்ஜுனன் ஒருவனே செய்வதாக வாக்குறுதி அளித்தான். படிப்பில் ஊக்கமும், பயிற்சியில் ஆர்வமும், குருவினிடம் அவன் காட்டிய பக்தியுமே துரோணரை அவனுக்கு அடிமையாகச் செய்துவிட்டது. அதனால் அவர் எளிதிலே நிறைவேற்ற முடியாத ஒரு வாக்குறுதியையும் செய்து விட்டார். அதன் பயனாகவே அவர் கடின சித்தமுடையவராக நடந்து கொள்ள வேண்டிவந்தது. ஏகலவ்யனைக்கண்டு அர்ஜுனன் மனம் வெதும்பியது வீரர்களின் இயற்கைக்கு ஒட்டியதே ஆகும்.

## ஏகலவ்யன் :

ஏகலவ்யன் வேடர் மகனாயினும், தானும் மற்றவர்களைப் போல் த்ரோணர் சிஷ்யனாக வேண்டும் என விரும்பி வந்தான். த்ரோணர் நிராகரித்ததற்குக் காரணம் அவனுக்கு ஊஹித்தறிவது கஷ்டமல்ல. ஆயினும் அவன் த்ரோணரிடம் கோபம் கொள்ளவில்லை. அவரைப்

போல் பதுமை செய்து அதன் முன் நின்று அஸ்திரப்பயிற்சி செய்தான். சிறந்த வீரனுனன். அவனது கைத் திறன், நாயின் வாயில் அவன் எழு அம்புகளைக் கொத்தாகப் பிரயோகித்ததால் எளிதில் புலப்படும். தான் செய்ய முடியாத காரியத்தை ஏகலவ்யன் செய்ததைக்கண்டு அர்ஜுனன் துரோணரிடம் கூறிய பொழுது, துரோணர் அம்முறையை அவனுக்குக் கற்பிக்கவில்லை. ஏகலவ்யனது திறமையைக் குறைக்கவே கருதி வில்வீரர்களுக்கு மிக முக்யமான கட்டைவிரலை வெட்டித் தரும்படிக் கேட்டார். ஏகலவ்யன் வெட்டித்தந்தான். ஏகலவ்யனது பெருமை இதனின்றும் நன்கு புலனாகின்றது, அது மாத்திரமின்றி நமது மனமும் அவனிடம் இரக்கப்படுகின்றது. இத்தகைய குருபக்தி மிகுந்த சிஷ்யன் ஏகலவ்யன், த்ரோணர் சிஷ்யர்களில் ரத்னம் போன்றவன். மகாபாரதம் என்ற ஸமுத்ரத்தில் ஒரு திவலை போனறுள்ள இவ்வரலாறு ஏகலவ்யனுக்கு அழியாப் புகழைத் தந்துள்ளது.

## அத்யாயம் 142

கௌரவர்களையும், பாண்டவர்களையும், த்ரோணர் அஸ்த்ரங்களைக் கற்பதில் சிஷ்யர்களாக ஏற்றுக்கொள்ளுதல். 1. வித்யாப்யாஸத்தின் முடிவில் பல முறையும் பரீக்ஷிக்கப்பட்ட அர்ஜுனனுக்கு த்ரோணாசார்யரிடமிருந்து சிறந்த அஸ்த்ரங்கள் கிடைக்கப் பெறுதல். 2. மண்ணால் செய்யப்பட்ட த்ரோணரின் ப்ரதிமையைப் பூஜிப்பதினால் ஏகலவ்யனுக்கு தனுர்வேதம் தானே தோன்றுதல். 3. வேட்டைக்காக கௌரவர்களும், பாண்டவர்களும், சென்ற பொழுது, ஏகலவ்யன் பாணங்களைப் ப்ரயோகித்து அவர்களது நாயின் வாயை நிரப்புதல். 4. அர்ஜுனனது வேண்டுகோளின்மேல் த்ரோணர் ஏகலவ்யனிடம்சென்று குருதக்ஷிணையாக அவனது வலது கை கட்டைவிரலைக் கேட்டல். 5. விரலை வெட்டி ஏகலவ்யன் தருதல். 6. த்ரோணர் சிஷ்யர்களைப் பரீக்ஷித்தல். 7. பரீக்ஷையினால் யுதிஷ்டிரர் முதலியவர்களை விலக்குதல்.

न अश्नीयात् सन्धिवेलायाम् ।

**वैशम्पायन उवाच :—**

**வைசம்பாயனர் சொன்னார்:**

1-2. **भीष्म :** - *பீஷ்மர்*, **पाण्डुसुतै : सह** - *பாண்டு புத்ரர்களுடன் கூட*, **तं** - *அவரை*, **गुरुं** - *குருவாக*, **प्रतिजग्राह** - *அங்கீகரித்தார்*. **पौत्रान्** - *(தனது) பேரன்களையும்*, **विविधानि**- *பலவகையான*, **सर्वान्** - *எல்லா*, **वसूनि** - *செல்வங்களையும்*, **आदाय** - *எடுத்துக்கொண்டு*, **शिष्या : इति** - *(இவர்கள் தங்களது) சிஷ்யர்கள் என்று (கூறி)*, **द्रोणाय** - *த்ரோணரிடம்*, **विधिपूर्वकं** - *முறைப்படி*, **ददौ** - *கொடுத்தார்*, **तदा** - *அப்பொழுது*, **द्रोण :** - *த்ரோணர்*, **बुद्धिमतां** - *புத்தியுடையவர்களில்*, **वरं** - *சிறந்த*, **भीष्मं** - *பீஷ்மரிடம்*, **वाक्यं** - *இவ்வாக்யத்தை*, **अब्रवीत्** - *கூறினார்*.

*வைசம்பாயனர் வியாஸரது சிஷ்யர். அவர் ஜனமேஜயன் என்ற அரசனுக்கு கூறுவதாக பாரதக்கதை அமைந்துள்ளது. எனவே வைசம்பாயனரது பேச்சில் 'அரசனே' என்று வரும் சொல் ஜனமேஜயனைக் குறிக்கும்.*

(க - து) த்ரோணர் ஹஸ்திநபுரம் வந்து பீஷ்மரைக் கண்டார். பீஷ்மர் அவரது திறமையை உணர்ந்து, தமது பேரன்களுக்கு அஸ்த்ர வித்யை உபதேசிக்கும் ஆசிரியராக இருக்கும்படி வேண்டினார்.

**पुत्रस्य अपत्यानि पुमांस : ,पौत्रा :, तान् ।**

**प्रति-जग्राह जगृहतु : जगृहु :** Perf. 3rd sing of **ग्रह्** with **प्रति**

**ददौ ददतु : ददु :** Perf. of **दा** III.

**पाण्डुसुतै : सह** - **सह** governs a noun in the instrumental case.

**த்ரோணர் கூறினார்:**

3. **शस्त्रज्ञ :** - *ஆயுதங்களை நன்கு அறிந்தவரும்*, **प्राज्ञसंमत :** - *அறிஞர்களால் அங்கீகரிக்கப்பட்டவருமான*,

